# அருணோதயம்.

# ARUNODAYAM,

Tranquebar Mission Journal.

VOL. XXXVII. MAY. NO. 5.

பொருள் அட்டவணை:



PRINTED AT THE EV. LUTH. MISSION PRESS,

TRANQUEBAR.

1900.

## மரண அறிக்கைகள்.

என் பிரிய மனைவி தேவநேசம் பொன்னமணியம்மாள் 5 மாதகாலமாக இருமல் கண்டு கஷ்டப்பட்டு, தான் மரிப்போம் என்று அறிந்து பல வேதவாக்கியங்களாலும், பிரார்த்தனை கவிகளாலும், பாட்டுகளாலும் தன்னை மோட்சபாக்கியத்துக்கும் சந்தோஷத்துக்கும் ஆயத்தப்படுத்தி "சாவுட மிரட்டலுக்கும், சத்துருக்கள் வற்மத்துக்கும், பயமற்றேன் கர்த்தரே என் சிநேகிதராமே" என்று அடிக்கடிச் சொல்லித் தன் நம்பிக்கையை வெளியிட்டு, மரிக்கும் தருணத்தில் "பிதாவே உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்" என்ற வார்த்தைகளுடன் மார்ச்சு ௴ 21-ம் ௳ $3\frac{1}{4}$ மணிக்குக் கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரையடைந்தது. அதன் பிரேதம் அன்று மாலை 5 மணிக்குச் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் வண்ணாரப்பேட்டை சர்க்கார் கல்லறைத் தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று அடக்கம் செய்யப்பட்டது. வயது 18, 2. 21.

"பராபரனையே நோக்கி என் ஆத்துமா அமர்ந்திருக்கிறது, அவராலே என் இரட்சிப்பு வரும்" சங்: 62. 1.

என்னை ஆறுதல் படுத்தின சகல பெரியோருக்கும் என் தாழ்மையான வந்தனம்.

**S. Paramanandham.**
*Head Master, Ev. Luth. Miss. Bethany School.*
RAYAPURAM,
MADRAS.

---

மாஜி கும்பகோணம் கோவில்பிள்ளை பெண்சாதியும் எனதருமைத் தாயாருமாகிய செல்லம்மாளம்மாள் சென்ற ஏப்பிரில் ௴ 15-ம் ௳ ஞாயிற்றுக்கிழமை மாலை 7 மணிக்குக் கர்த்தருக்குள் நித்திரை அடைந்து, மறுநாள் காலை 11 மணிக்குச் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் நமது உத்தான தோட்டத்தில் நல்லடக்கம் பண்ணப்பட்டார்கள். வயது 67.

"கிறிஸ்து எனக்கு ஜீவன் சாவு எனக்கு ஆதாயம்"

தரங்கை, கோட்டை
2-5-1900 } C. S. விசுவாசநாயுடு.

# அருணோதயம்

தரங்கம்பாடி
மிசியோன் பத்திரிகை.

No. 5. மே. 1900.

## பரிசுத்த தியானங்கள்.

### ௩௯-ம் தியானம்.

### லோகத்தின் மாயையைப் பற்றியது.

*அநித்தியத்திலும் நித்தியமே மேன்மையானது.*

ஆத்துமாவே, உலகத்தில் உள்ள காரியங்களைச் சிநேகியாதே. உலகம் அழிந்துபோம். அதில் உள்ள எல்லாக் காரியங்களும் வெந்துபோம். அப்போது அதின்மேல் உள்ள உன் சிநேகம் என்னமாம்? நீ என்றைக்கும் பிழைத்திருக்கும்படி நித்திய நன்மையைச் சிநேகி. எல்லாச் சிருஷ்டியும் மாய்கைக்குக் கீழ்ப்பட்டிருக்கிறது. ஆதலால் யார் சிநேகத்தினால் சிருஷ்டிகளோடு ஒட்டிக்கொள்ளுகிறானோ, அவன் தானும் மாயையாவான். உன் இருதயம் உறுதியும் சமாதானமுமாய் இருக்கும்படிக்கு உண்மையும் உறுதியுமான நன்மையைச் சிநேகி, நீ உலக கனத்திலே உன் சந்தோஷத்தைத் தேடுகிறதும் என்ன? மனுஷரிடத்திலே கனத்தைத் தேடுகிறவன் பராபரனால் கனம் பெறவே மாட்டான். உலக கனத்தைத் தேடுகிறவன் தன்னை உலகத்துக்கு ஒத்தவனாக்கிக்கொள்ளவேண்டும். உலகத்துக்குப் பிரியமானவன் பராபரனுக்குப் பிரியமாயிருக்க முடியாது. அழிந்துபோகிறவர்களும் நிலை அற்றவர்களுமான மனிதர் கொடுக்கும் காரியங்களெல்லாம் அழிவுக்குரியதும் நிலையற்றதுமாயிருக்கின்றன. ஆதலால் உலக கனமும் நிலையுள்ளதல்ல. உலகத்தார் நேற்று வான பரியந்தம் மிகுந்த மகிமையால் உயர்த்தினவனை இன்று மகா தாழ்வான அவமரியாதை செய்வார்கள். நீ பராபரனால் கனம் அடையும்படிக்கு அவருக்குப் பிரியமாயிருக்கப் பார். பராபரன் கொடுக்கிற கனம் உண்மையும் நிலையுள்ளதுமாயிருக்கிறது. மனுஷராலே பெரியவனாக எண்ணப்படுகிற

வன் என்ன மேன்மையுள்ளவன். பராபரனுடைய சமூகத்திலே ஒவ்வொரு மனிதனும் எப்படியிருக்கிருனே, அப்படி அவன் இருப்பானே ஒழிய அதற்கு மிஞ்சியிருக்கக்கூடாது.

கிறிஸ்து நாதர் தம்மை இராசாவாக்கும்படி பிடிக்கத் தேடுகிருர்கள் என்பதை அறிந்தபோது அவர்களை விலகிப்போய் விட்டார். ஆனல் நிந்தைக்கும் சிலுவையின் ஈங்கிஷையான தண்டனைக்கும் உட்படுத்த அவரைத் தேடினபோது முழுமன தோடும் தம்மைத் தாமே ஒப்புக்கொடுத்தார். ஆதலால் நீ கிறிஸ்து நாதருக்கு ஒத்தவனுகும்படி உலகத்தின் மகிமையைப் பார்க்க உலகத்தால் உண்டாகும் ஈங்கிஷையைச் சிநேகி. கிறிஸ் துவுக்காக உலக நன்மைகளைப் புறக்கணிக்காதவன் தன் சொந்த சீவனை அவருக்காக எப்படி விடுவான்? கிறிஸ்து சிலுவையினு டைய நிந்தை வழியாய்த் தம்முடைய மகிமைக்குள் பிரவேசித் ததுபோல, ஒருவன் உலக மகிமையை அசட்டைபண்ணினலே அல்லாது மெய்யான மகிமையை அடைய வழியில்லை. ஆத லால் நீ வரும் சீவனிலே கனப்படுத்தப் படும்படிக்கு நிந்திக் கப் படுகிறவனும், அற்பமாய் எண்ணப்படுகிறவனும், இச்சீவ னிலே புறக்கணிக்கப்பட்டவனுமாயிருக்கப் பிரியப்படு. நாம் உலகிகனத்தை எப்படி எண்ணவேண்டும் என்பதைப் பற்றிக் கிறிஸ்து நாதர் தம்முடைய சீவியத்தால் நமக்கு மாதிரி காண் பித்து இருக்கிருர். பரமண்டலத்தின் மகிமை எல்லாம் அவ ருக்குப் பண்செய்கிறது; ஆம் அவர் தானும் மெய்மகிமையான வர். ஆனலும் அவர்தாமே எல்லா மகிமையையும் வெறுத்தார். ஆதலால் ஒருவன் எவ்வளவாக கனத்தையும் சரீர நன்மைகளை யும் நாடி அனுபவிக்கிருனே அவன் அவ்வளவாகக் கிறிஸ்துவின் சாயலுக்குத் தூரமாய் விலகுகிறதைக் கண்டு ஆழ்ந்து துக்கப் படக்கடவான். உள்ளே ஆகாத மனச்சாட்சி குற்றம் சாட்டு கிறதாயிருந்ததேயானல் மனித புகழ்ச்சி எல்லாம் வீண்தானே. காய்ச்சல் அடிக்கிற மனிதன் தந்தப் படுக்கையின் மேல் படுத் தாலும், அவனை வாதிக்கிற உள்ளான அகோரம் குறையாதிருக் குமாகில் அவனுக்கு என்ன பிரயோசனம்? உன் மனதின் நற் சாட்சியே மெய்ச்சங்கையும் மெய்ப்புகழ்ச்சியுமாயிருக்கிறது பராபரனையும் உன் சொந்த மனச்சாட்சியையும் அல்லாமல் பா ரபட்சம் அற்ற நியாயாதிபதி வேறொருவரும் இல்லை. உன் கிரி யைகள் இந்த நியாயாதிபதிகளுக்கு ஏற்கையாயிருக்கும்படிக்குப் பார். நீ தானும் விசேஷமாய்ப் பராபரன் உன்னை அறிந்திருப் பது போதாதா. ஆனல் நீ யேன் ஐசுவரியத்தை அவ்வளவு விரும்புகிருய்? யாருக்குப் பராபரன் போதுமான பொருள் அல்லாதிருக்கிருரோ அவனே மிகுந்த பொருளாசைக்காரன். இச்சீவியம் நித்திய ஊருக்கு வழியாயிருக்கக்கொள்ள அதிக ஐசுவ



ரியம் என்னத்துக்கு உதவும்? அதிகமான பாரம் கப்பலை மெது வாக ஓடச்செய்கிறதுபோல அது பயணக்காரனைப் பாரம் சுமத் துகிறது.

பராபரனுடைய ஊழியக்காரரின் ஐசுவரியம் பரமண்ட லங்களின் இராசாவாகிய கிறிஸ்து தானே. மெய்யான பொக்கி ஷம் ஒரு மனிதனுக்குப் புறம்பாக அல்ல, அவனுக்கு உள்ளாக வே யிருக்கவேண்டும. அந்தச் சமுதாய நியாயத்தீர்ப்புக்கு முன் னே நீ உன்னுேடு கொண்டுபோகக்கூடியது எதுவோ அதுவே மெய்யான பொக்கிஷம். ஆனல் புறம்பான பொக்கிஷங்கள் எல் லாம் மரணத்திலே நம்மை விட்டு எடுபட்டுப்போகிறதும், சேக ரித்து வைக்கப்பட்டதெல்லாம் அழிந்துபோகிறதுமாயிருக்கிறது. அவைகளைச் சேர்த்துவைக்கிறவனும் பராபரனுக்குள் ஐசுவரிய வானுயிராவிட்டால் அவனும்கூட மகா கேடானவிதமாய் அழி வுக்கு உள்ளாவான். நீ எளியவனுய் லோகத்தில் வந்தாய், எளி யவனுகவும் லோகத்தை விட்டுப் போவாய். அப்படியிருக்க, இந்த உன் துவக்கமும் முடிவுமான நிலைமைக்கு உன் மத்திப நிலைமை அத்தனை வித்தியாசப்படுவானேன்? நாம் அனுபவிக்கக்கூடியதே ஐசுவரியம். அதற்குக் கொஞ்சமாயிருந்தாலும் போதும். கிருபை தர்மம் என்றவற்றின் சிறிதான வரமும் பூலோகத்தினுடைய சகல ஐசுவரியங்களையும் பார்க்க மேலானது. தர்மம் தன்னில் தானே பராபரனுக்குப் பிரியம். ஐசுவரியமோ தர்மவழியாய் மாத் திரம் அவருக்குப் பிரியம்.

முழுலோகத்தினுடைய ஐசுவரியத்தைப் பார்க்கக் கிறி ஸ்துவினுடைய தரித்திரமே நமக்கு அதிகப் பிரீதியாயிருக்க வேண்டியது. தரித்திரமானது கிறிஸ்துவிலே பரிசுத்தமாக்கப் பட்டிருக்கிறது. அவர் தம்முடைய பிறப்பிலே எளியவராயி ருந்தார்; தமது சீவியத்திலே மிகவும் எளிவராயிருந்தார்; மர ணத்திலோ மகா எளியோராயிருந்தார். கிறிஸ்துநாதர் தாமே இந்த லோகதரித்திரத்தைப் பரம இராச்சியத்தின் ஐசுவரியத் துக்குமேலானதாக எண்ணிக்கொண்டிருக்க, நீ அதை இந்த உல கத்தின் ஐசுவரியத்துக்கு மேலானதாக எண்ண ஐயப்படுவா னேன்? பராபரனுக்குத் தன் சரீரத்தைக்குறித்த கவலையை ஒப்புக்கொடாதவன் தன் ஆத்துமத்தை எப்படி அவருக்கு ஒப்புக் கொடுப்பான். தன் ஐசுவரியத்தைத் தன் சகோதரனுக்காகச் செலவழிக்காதவன் அவனுக்காகத் தன் சீவனை எப்படிக்கொடுப் பான். (Bernhard என்பவர் சொல்லுகிறதுபோல). ஐசுவரி யத்தைச் சம்பாதிப்பதில் பிரயாசை, காப்பதில் பயம், இழப்ப தில் வருத்தம். ஆனல் இதிலும் பரிதாபம் என்ன வென்றல் பொருளாசைக்காரனுடைய பிரயாசை அழிவாய் மாத்திரம் அல்ல, அழிப்பாயும் இருக்கிறது. நீ சிநேகிக்கிற பொருளை

உன் நேவன். உன் பொக்கிஷம் எங்கேயோ அங்கே உன் இருதயமும் இருக்கும். சரீரத்துக்கு அடுத்ததும், உலகத்துக்கு அடுத்ததும், அழிவுக்கு உரியதுமான ஐசுவரியத்தைச் சிநேகிக்கிறவன் ஆவிக்கு அடுத்ததும் நித்தியமுமான ஐசுவரியத்தைச் சிநேகிக்கமாட்டான்; ஏனெனில், அது மனிதனுடைய இருதயத்தைக் கீழே அமிழ்த்தித் தாழ்மையாய் இழுத்துக்கொண்டுபோகிறது, இதுவோ அதை உயரப்பண்ணி மேலாகக்கொண்டுபோகிறது. பூலோககாரியங்களைச் சிநேகித்தல் ஆவியைப்பாரப்படுத்துகிறது என்று கிறிஸ்துவை உண்மையாய்ச் சிநேகிக்கிறவர்களில் ஒருவர் சொன்னர். உப்புத் தூணாய்ச் சமைந்த லோத்தின் பெண்சாதி, நாம் உலகத்தில் உள்ள காரியங்களைத் திரும்பிப்பாராமல் நமது பரம ஊருக்கு நேரான சரிவழியிலே நடந்தேறப் பிரயாசப்படவேண்டும் என்று பிரசங்கிக்கிறுன். அப்போஸ்தலர் எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் கிறிஸ்துவைப் பின் சென்ருர்கள்; ஏனெனில் மெய்யான ஐசுவரியத்தைப்பற்றிய அறிவு பொய்யான ஐசுவரியத்தைப்பற்றிய ஆசையை விலக்குகிறது. ஆவியின் ருசியால் மாமிசம் ருசியற்றுப்போம். கிறிஸ்து ஆருக்கு அருமையோ அவனுக்கு உலகம் வெறுமை. அப்படியிருக்க நீயேன் இவ்விதமாய்ச் சிற்றின்பத்தை ஆசிக்கிறுய்.

சிலுவையில் அறையுண்டவரைக் குறித்த நினைவானது உன்னில் சிற்றின்பத்தைக்குறித்த எல்லா ஆசையையும் சிலுவையில் அறையட்டும். நரக அக்கினியின் நினைவானது உன்னில் உள்ள இச்சையின் அக்கினியை எல்லாம் அவிக்கட்டும். மகா கொஞ்ச நிமிஷத்தின் இன்பத்தை நித்திய தண்டனையோடு ஒத்துப்பார். மாமிச இன்பங்கள் மிருககுணமானவை. அவை நம்மை மிருகத்துக்குச் சமமாக்கும். பன்றியின் தவிட்டினுல் தன்னை ஒவ்வொருநாளும் நிரப்பிக்கொண்டவனுக்கு மோட்ச இராச்சியத்தின் இன்பம் ருசிக்காது. நாம் நம்முடைய மாமிசத்துக்கு அடுத்த இன்பங்களை எல்லாம் மடிவித்து, ஆபிரகாமைப்போல நம்முடைய இருதயத்தின் இச்சை என்னப்பட்ட பிரிய குமாரனைப் பலியிட்டு, எல்லா இன்பங்களையும் மனதார ஒழித்துவிட்டுச் சிலுவையின் கடுமையைத் தழுவிக்கொள்வோமாக. மோட்சராச்சியத்துக்குப் போகும்வழி ரோசா புஷ்பம் தெளித்த சமனனவழி அல்ல, முள்ளுகளினுல் நிறைந்த காடுமுறடான வழி.

புறம்பான மனுஷன் மாமிச சந்தோஷங்களாலும், உள்ளான மனுஷனே சிலுவையினுலும் உபத்திரவத்தினுலும் வளருகிறுன். புறம்பான மனுஷன் எவ்வளவுக்கு வளருகிறுனே அவ்வளவுக்கு உள்ளான மனுஷன் குறைகிறுன். மாமிச இன்பங்கள் சரீரத்துக்குரியவை. மெய்த்தேவபக்தனுயிருக்கிறவன் சரீரத்திற்காக வெகு கொஞ்சமும் ஆத்துமத்திற்காக அதிகமுமாய்க் கவலைப்



படுகிறுன். மாமிச இன்பங்கள் நமது இருதயம் பராபரனுடைய சிநேகத்திலே விடுதலையடைந்திராதபடிக்கு அதைச் சிறைப்படுத்துகிறது. நீ மரணத்திலும் பிற்பாடு நியாயத்தீர்ப்பிலும் உன்னேடு மாமிச இன்பங்களை அல்ல, அவைகளை அசட்டைபண்ணுகிற மனதையே கொண்டுபோவாய். ஆதலால் அந்த மாமிச சிநேகம் உன்னை மோசம்போக்காதபடிக்கு தேவபயம் உன் மாமிசத்தை ஊடுருவுவதாக. உன்மாமிச சிந்தையின் தாறுமாறுன எண்ணங்கள் உன்னைச் சிறைப்படுத்திப்போடாத படிக்குத் திவ்விய நியாயத்தீர்ப்பின் நினைவு எப்போதும் உன் மனதில் இருக்கட்டும். சர்ப்பத்தின் இச்சகமுகத்தின் மேல் அல்ல, கொடூரமாய்க் கடிக்கிற அதின் விஷப்பல்லின்மேல் நினைவாயிரு. நீ கடைசியிலே கிறிஸ்துவினுல் ஜெய்சீலன் என்று முடிசூட்டப்படும்படிக்குக் கிறிஸ்துவினுடைய கிருபையினுல் ஜெயங்கொள்.

---

## பத்திராதிபர் குறிப்புகள்.

பராபரனுடைய ரூபாயிருந்தும், தம்மைத்தாம் வெறுமையாக்கிச் சிலுவையின் மரணபரியந்தம் தம்மைத் தாழ்த்தின கிறிஸ்து மேலுக்கு மேலாகவும் உயர்த்தப்பட்டுப் பிதாவின் வலபுறகம் வீற்றிருக்கும் சர்வலோக ராஜன் ஆனர். அவரோடு பாடுபடுகிறவர்கள் அவருடைய மகிமைக்கும் பங்காளராவர். பரத்துக்கேறினவர் அளிக்கும் ஈவுகளில் உன்னதமானது பரிசுத்த ஆவியானவரே. இயேசுபெருமானைத் தன் இருதயச் சிம்மாசனத்தேற்றி, அவரை மகுடாபிஷேகம் செய்கிறவனே, பரிசுத்த ஆவியால் நிறைந்து மகத்துவமான கிரியைகளை நடத்தக்கூடியவனுவன்.

---

திரிசிராப்பள்ளியில் நூதனமாய் வெளிப்பட்ட அமிர்தவசனி என்ற சிறந்த தமிழ்ப் பத்திரிகையை வரப்பெற்ருேம். அன்பில் ஸ்ரீ வெங்கடாசாரியர் அப்பத்திரிகைக்கு ஆசிரியர் என்றபோதே அதன்பொருளும் நடையும் சிறந்திருக்கும் என யாவரும் அறிவர். ஆதலின் நாம அதைக் குறித்து விசேஷித்துப் பிரஸ்தாபிப்பதற்கு அவசியமில்லை. இப்பத்திரிகையை யாவரும் வாசித்துப் பயன்பெறவேண்டுமென்பதே நமது அத்தியந்த விருப்பம். அதன் வருஷசந்தா தபாற்கூலி உள்பட ரூ. 2—12—0.

## 1899-ம் வருஷ முடிவில் நமது மிசியோன் சபைகளின் பொக்கிஷ நிலைமையைக் காட்டும் கணக்கு.

| நம்பர். | சேகரம். | சபைப் பொக்கிஷத்துக்கு வரவு. | | | ஏழைப் பொக்கிஷத்துக்கு வரவு. | | | பல விஷயங்களுக்காகச் செய்த சேர்ப்பு. | | | சபைப் பொக்கிஷக் கையிருப்பு. | | | ஏழைப் பொக்கிஷக் கையிருப்பு. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
| 1 | தரங்கன்பாடி ... ... ... ... | 211 | 8 | 4 | 118 | 9 | 8 | 19 | 5 | 2 | 10365 | 9 | 9 | 244 | 9 | 1 |
| 2 | காரைக்கால் ... ... ... ... | 9 | 2 | 6 | 16 | 14 | 6 | 1 | 8 | ... | 100 | 8 | ... | ... | ... | ... |
| 3 | பிறையாறு ... ... ... ... | 168 | 11 | 5 | 138 | ... | 1 | 63 | 4 | 6 | 7020 | ... | 10 | 434 | 2 | 1 |
| 4 | மணிக்கிராமம் ... ... ... ... | 10 | 13 | 10 | 22 | 6 | 9 | 3 | 12 | ... | 1418 | 11 | 3 | 460 | 10 | ... |
| 5a. | மாயபுரம் ... ... ... ... | 66 | 13 | 11 | 237 | 4 | 10 | 6 | 13 | 2 | 2179 | 14 | 3 | ... | ... | ... |
| ,, b. | ஷை தேரிழந்தூர் ... ... ... | 7 | 1 | 7 | | | | 15 | ... | ... | 243 | 3 | 3 | ... | ... | ... |
| 6 | மணல்மேடு ... ... ... ... | 10 | 12 | ... | 23 | 13 | 5 | ... | 1 | 3 | 487 | 6 | 10 | ... | ... | ... |
| 7 | சீர்காழி ... ... ... ... | 86 | ... | 8 | 81 | 1 | 10 | 25 | 12 | ... | 1363 | 2 | 11 | ... | ... | ... |
| 8 | திருப்புங்கூர் ... ... ... ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 9 | கும்பகோணம் ... ... ... ... | 11 | 3 | ... | 38 | 12 | 7 | ... | 8 | 6 | 488 | 14 | 3 | ... | ... | ... |
| 10 | நாகப்பட்டணம் ... ... ... ... | 157 | 15 | 10 | 66 | 9 | 10 | 9 | 13 | 6 | 7851 | 13 | 1 | ... | ... | ... |
| 11 | திருவாரூர் ... ... ... ... | 25 | 15 | 6 | 13 | 14 | 6 | 4 | 14 | 2 | 460 | 4 | 8 | ... | ... | ... |
| 12 | தஞ்சாவூர் ... ... ... ... | 135 | 13 | 3 | 215 | 3 | 9 | 119 | 8 | 7 | 7240 | 11 | 8 | 52 | 15 | 6 |
| 13 | அணைக்காடு ... ... ... ... | 30 | 3 | ... | 32 | 13 | 5 | 35 | 8 | 1 | 3653 | 7 | 2 | 18 | 7 | 7 |
| 14 | திருச்சிறுப்பள்ளி ... ... ... | 269 | 2 | 9 | 107 | 9 | 3 | 7 | 14 | 7 | 5561 | 9 | 7 | 260 | 10 | 10 |
| 15 | மேட்டுப்பட்டி ... ... ... ... | 66 | 15 | 7 | 25 | 9 | 8 | 3 | 8 | ... | 1484 | 13 | 3 | ... | ... | ... |
| 16 | மதுரை ... ... ... ... | 91 | ... | 10 | 147 | 12 | 2 | 30 | 4 | 5 | 2414 | 12 | 10 | ... | ... | ... |
| 17 | பேரையூர், கொழும்பு ... ... ... | 9 | 3 | 10 | 27 | 7 | 3 | 1 | 5 | 8 | 426 | 11 | 7 | ... | ... | ... |
| 18 | திண்டுக்கல் ... ... ... ... | 96 | 13 | 4 | 91 | 4 | 7 | 10 | 8 | 3 | 2974 | 15 | ... | 13 | 12 | 10 |
| | | 94 | 7 | 6 | ... | ... | ... | 23 | 9 | 1 | 920 | 12 | 4 | ... | ... | ... |
| 19 | புதுக்கோட்டை ... ... ... | 17 | 9 | 10 | 54 | ... | 11 | 15 | 12 | 9 | 759 | 9 | 8 | 249 | 13 | ... |
| 20 | கோயமுத். உள்ளூர் சபை ... ... | 199 | 9 | 9 | 53 | 6 | 2 | 126 | 14 | 7 | 11191 | 5 | 8 | 76 | 2 | 7 |
| | ஷை கிராமச் சபை ... ... ... | 130 | 12 | 5 | 82 | 12 | 6 | 124 | 11 | 1 | 2314 | 8 | 2 | ... | ... | ... |
| 21 | ஈரோடு ... ... ... ... | 91 | 8 | 3 | 59 | 3 | 10 | 13 | 3 | 10 | 807 | 10 | 5 | 9 | 11 | 9 |
| 22 | ஏர்க்காடு ... ... ... ... | 16 | 8 | 2 | 21 | 13 | 5 | 9 | 14 | 2 | 1246 | 8 | 4 | 61 | 9 | 1 |
| 23 | பெங்களூர் ... ... ... ... | 38 | 7 | 7 | 32 | 4 | 4 | 1 | 12 | 3 | 4522 | 14 | ... | ... | ... | ... |
| 24 | சென்னை, புரசபாக்கம் ... ... | 493 | 9 | 7 | 232 | 11 | 2 | 323 | 8 | 7 | 12418 | 12 | 11 | 47 | 10 | ... |
| | ஷை ராயபுரம் ... ... ... | 167 | 3 | 8 | 52 | 15 | 6 | 74 | 8 | 6 | 6001 | 15 | 7 | 17 | 5 | 3 |
| 25 | திருவள்ளூர் ... ... ... ... | 34 | 4 | 7 | 53 | 8 | 2 | 4 | 6 | 8 | 148 | 9 | 5 | ... | ... | ... |
| 26 | ஸ்ரீபரம்புத்தூர் ... ... ... | 12 | 6 | 8 | 44 | 9 | ... | 31 | ... | ... | 66 | 15 | 4 | ... | ... | ... |
| 27 | செங்கல்பட்டு ... ... ... ... | 18 | 6 | 7 | 45 | 1 | 8 | 2 | 12 | ... | 113 | 8 | 5 | ... | ... | ... |
| 28 | விழுப்புரம் ... ... ... ... | 35 | 10 | 5 | 68 | 4 | 6 | 10 | 13 | 7 | 228 | 10 | 7 | ... | ... | ... |
| 29 | பண்ணுருட்டி ... ... ... ... | 4 | 7 | 8 | 19 | 8 | 8 | 6 | 9 | ... | 27 | 8 | 1 | ... | ... | ... |
| 30 | கூடலூர் ... ... ... ... | 18 | 15 | 8 | 45 | 14 | 7 | 20 | 3 | 6 | 2019 | 14 | 11 | ... | ... | ... |
| 31 | விருத்தாசலம் ... ... ... ... | 1 | 11 | ... | 6 | 14 | 11 | ... | 6 | ... | 51 | 11 | 4 | ... | ... | ... |
| 32 | நென்னூர் ஐயம்பேட்டை ... ... | 13 | 10 | 7 | 14 | 6 | 9 | 1 | ... | 6 | 313 | 11 | 10 | ... | ... | ... |
| 33 | சிதம்பரம் ... ... ... ... | 45 | 12 | 1 | 109 | 5 | 4 | 93 | 2 | 4 | 1279 | 5 | ... | 465 | 15 | ... |
| 34 | மன்னார்குடி ... ... ... ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 190 | 10 | 2 | 351 | 9 | 4 |
| 35 | இரங்கூன் ... ... ... ... | 631 | 13 | ... | 118 | 4 | 3 | 188 | 14 | ... | ... | ... | ... | ... | ... | ... |
| | ஆக மொத்தம் ... ... | 3526 | 2 | 2 | 2519 | 5 | 9 | 1432 | 8 | 7 | 100361 | 4 | 4 | 2814 | 15 | 11 |

## சன்மார்க்க சரிதைகள்.

ச. சரசக்காரன் முடிவு

இருபத்து மூன்று வருஷம் விர்த்தம்பர்க் என்னும் நகரத்தின் சபையில் தேவஊழியம் செய்த ஒரு குரு 1873-ம் வருடமுடிவில் மற்றொரு சபையை விசாரணை செய்ய நியமிக்கப்பட்டார். அவர் பழைய சபையில் ஊழியம் செய்துவந்த கடைசி தினங்களில் ஒரு விசேஷித்த சம்பவம் நேரிட்டது. அதே கிராமத்தில் இந்தப் போதகரை நிந்தனை செய்து தொந்தரவுபண்ணிக்கொண்டு வந்த ஒருவன் இருந்தான். குடியர்களோடு சாராயக்கடைக்குப் பலமுறையும் சென்று நன்றாய்க் குடித்துக் களித்து ஒருபோதும் தவறாத தனது குசாக்கரபுத்தியினால் பேசி, சன்மார்க்க விஷயங்களை முடிவில் நிந்தித்துச் சொல்லுவான். இந்தக் காரணத்தைப் பற்றிக் குருவானவர் அவனுக்குப் பல்முறையும் புத்தி கூறியும் பயன்படாமல் போயிற்று. அவர் புத்தி சொல்லச் சொல்ல, அதையவன் கவனிக்காமல் அவர்மேல் அதிகக் கோபம் கொண்டே வந்தான். சபையாரும் குருவும் ஒருவரையொருவர் பிரியும் காலம் சமீபித்தபோது அந்த அவிசுவாசி தன் மனையாளைப் பார்த்து: ஓ பெண்ணே, அடுத்த கிழமை இச்சபை குரு பிரயாணமங்கலோபசாரப் பிரசங்கஞ் செய்யப் போகிறார். அச்சமயத்தில் என் கண்ணீரைத் துடைக்க என் கைக்குட்டைகள் போதா. நீ உன் துப்பட்டியைக் கொடுக்கவேண்டும் என்றான். ஆயினும் தான் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்தது. மங்கலோபசாரப் பிரசங்கம் நடக்கும் வாரத்துக்குமுன் புதன்கிழமையில் நிந்தனைக்காரன் சற்றுச் சுகவீனத்தோடு வீடுவந்து சேர்ந்தான். அவன் வியாதியாய் நெடுநாள் கிடக்கவில்லை. வியாழக்கிழமை மாலை அவன் இறந்துபோனான். அவன் கேட்ட துப்பட்டி அவன் தேகத்தைச் சுற்ற உதவியது. குரு தமது கடைசிப் பிரசங்கஞ் செய்த அன்றையத்தினம் அவன் அடக்கம் செய்யப்பட்டான். சபையாரெல்லாருக்கும் நடுநடுக்கம் உண்டாகியது. "சரசக்காரர் உளுக்கார்ந்திருக்கிற இடத்தில் உளுக்காராமல் இருக்கிற மனிதன் பாக்கியவான்" (சங். க, க) என்ற சப்தம் யாவருக்குஞ் சொல்வதாகத் தோற்றியது.

## பாவ சங்கீர்த்தனத்தைப் பற்றியது. (தொடர்ச்சி)

ஆயினும், இப்போதகம் சிலருக்கு இடறலாயிருப்பது ஏன்? குருவின் தத்துவத்தைப்பற்றிய நமது போதகத்தைப் பிசகாய் அறிந்திருத்த



லே. குருவானவர் தாம் பெற்றுக்கொண்ட பட்டாபிஷேக வல்லபத்தை முன்னிட்டு ஒருவன் தலையில் கையை வைத்து: மன்னிக்கிறேனென்று கூறினவுடனே அது மந்திரம்போல் அப்பாவியினிடம் பலிதமாகி அவனை மாற்றிவிடுவதாக நாம் எண்ணுகிறோம் என்பதாகப் பலரும் நினைப்பதே மனக்கலக்கத்துக்குக் காரணம். இவ்வாறு நாம் எண்ணுவதே இல்லை. பாவக்கட்டவிழ்க்கும் சக்தி பராபரனுடைய வசனத்துக்கே உரியது. அப்படியானால், "நான் உன் பாவங்களை மன்னிக்கிறேன்" என்று ஒரு அற்ப மனிதன் சொல்வதற்கான அதிகாரம் அவனுக்கு எங்கிருந்து வந்தது. நமது இரட்சகர் மத்தே. 16, 19-ல் பேதுருவை நோக்கி: நான் வான இராச்சியத்தின் திறவுகோல்களை உனக்குக் கொடுப்பேன். பூமியிலே எதைக் கட்டுப்படுத்துவாயோ, அது வானத்திலே கட்டுப்பட்டதாயிருக்கும். பூமியில் எதைக் கட்டவிழ்ப்பாயோ, அது வானத்திலே கட்டவிழ்க்கப்பட்டதாயிருக்கும் என்று சொன்னார். வானத்தைத் திறக்கும் திறவுகோல் பாவமன்னிப்பே. பேதுரு நம்மைப்போல் பாடுள்ள அநித்திய மனிதனாயிருந்தும், அவன் கூறிய பாவமன்னிப்பு வானத்தில் பராபரன் கூறிய மன்னிப்பாக ஒப்புக்கொள்ளப்பட்டது. பாவத்தை மன்னிக்கும் இந்த அதிகாரம் பேதுருவுக்கு மாத்திரமல்ல, பேதுருவைப்போல் கிறிஸ்துவை விசுவாசித்த மற்றச் சீஷருக்கும் கொடுக்கப்பட்டது என்று யோவான் 20-ம் அதிகாரத்திலே வாசிக்கிறோம். இயேசு சீஷர்மேல் ஊதி, அவர்களுடனே: பரிசுத்த ஆவியை வாங்குங்கள். எவர்கள் பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவர்களுக்கு மன்னிக்கப்பட்டிருக்கிறது. எவர்கள் பாவங்களைச் சுமத்தி வைக்கிறீர்களோ, அவர்கள்மேல் அதுகள் சுமத்தி வைக்கப்பட்டிருக்கிறது என்றார்.

இதின்படியே அப்போஸ்தலருக்கு மாத்திரமல்ல, அவர்கள் பின்னடியாராகிய குருக்களுக்கு மாத்திரமல்ல, அவர்களைப்போல் கிறிஸ்துவுக்கு அடியாராகி, பரிசுத்த ஆவியைப் பெற்ற சகல சீஷருக்கும் பாவக்கட்டவிழ்க்கும் அதிகாரமுண்டு. திருச்சபையே கிறிஸ்துவின் சீஷர் கூட்டமாதலால், இவ்வதிகாரம் திருச்சபைக்கு உரித்து. ஒத்துப்பார் மத். 18, 17. 18. திருச்சபை இவ்வதிகாரத்தை ஒழுங்காய் அழைக்கப்பட்ட வசனத்தின் ஊழியத்தைக்கொண்டு கையாடுகிறது. இவ்வுலகத்தில் திருச்சபை உள்ளளவும், அதின் அவயவங்கள் இவ்வதிகாரத்தைக் கையாடி, பாவங்களை மன்னித்து, பாவக்கட்டவிழ்த்து வருவார்கள். விசுவாசிகள் தங்கள் சகோதரருக்குத் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு பாவமன்னிப்பைத் தனித்தனியே கூறப்பெற்று ஆறுதல் அடைவார்கள்.

இயேசுநாதர் திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, திடன்கொள் உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றும், பாவியான ஸ்திரீயை நோக்கி: உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்றும் மொழிந்தருளியபோது பரிசேயர்: பாவத்தை மன்னிக்கிற இவன் யாரென்று சொல்லி முறுமுறுத்தாலும், அந்த ஏழை ஆத்துமாக்கள் எவ்வளவு ஆறுதலடைந்திருப்பார்கள்.

இயேசுநாதர் மெய்யான தேவனாயிருந்ததால் அவர் இவ்வாறு பாவமன்னிப்பைக் கூறக்கூடியவர், மனிதர் அவ்வாறு சொல்வது தேவதூஷணமென்று சிலர் ஆட்சேபிக்கலாம். இப்பேச்சுக்கு இடமிராதபடி நமது இரக்ஷகர்: பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷனுடைய குமாரனுக்கு அதிகாரமுண்டு என்கிறதை நீங்கள் அறியவேண்டும் என்றார். கும்புகள் இதைக் கண்டு ஆச்சரியப்பட்டு மனுஷருக்கு அப்படிக்

கோர்ந்த அதிகாரத்தைக் கொடுத்த பராபரனை மகிமைப்படுத்தினார்கள் என்று சுவிசேஷகன் சொல்லுகிறான். இப்படியே நமது பலவீனத்தை அறிந்த பராபரன் நம்மை விசுவாசத்தில் பலப்படுத்தி, பாவமன்னிப்பின் நிச்சயத்தை நமக்கு அருளும்படி. நம்மைப்போன்ற மானிடரைக்கொண்டு நமது பாவங்களை மன்னிக்க ஏற்பாடு செய்து, அவர்கள் கூறும் மன்னிப்பின் வழியே தமது மன்னிப்பை அருளுகிற ஒப்பற்ற கிருபையைப் பெரும் பொக்கிஷமாக எண்ணுகிற லுத்தரன் சபை அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கையின் 25-ம் சங்கதியில்: பாவியைக் கட்டவிழ்க்கிற வசனம் எவ்வளவு ஆறுதல் நிறைந்ததென்றும், அதைப் பிராபரனுடைய ஸ்தானாபதிகள் அவருடைய கட்டளையின்படி கூறுகிறபடியால், அது மனிதனுடைய வசனமாயிராமல் பாவங்களை மன்னிக்கிற பராபரனுடைய வசனமாயிருக்கிறது. ஆகையால், இந்தக் கட்டவிழ்த்தல் எவ்வளவு உசிதமும் அருமையுமாய் எண்ணப்படவேண்டும் என்றும் சனங்களுக்குக் கருத்தாய்ப் போதிக்கப்பட்டு வருகிறது. ஆம், இதைப்பற்றிய தேவகட்டளையும் திறவுகோல் என்னும் அதிகாரமும் வாதிக்கப்படுகிற மனச்சாக்ஷிகளுக்கு அவசியம் தேவையென்றும், எவ்வளவாய் ஆறுதல் தருகிறதென்றும், சகல கருத்தோடும் போதிக்கப்பட்டு வருகிறதுமன்றி, பராபரன் வானத்திலிருந்து தொனிக்கும் அவருடைய வசனமாக நாம் இந்தக் கட்டவிழ்த்தலின் வசனத்தை விசுவாசித்து அதினாலாறுதலடைந்து சந்தோஷப்படவும், இந்த விசுவாசத்தினால் நமக்கு பாவமன்னிப்பு உண்டு என்று அறியவும் வேண்டுமென்பது பராபரனுடைய சித்தமென்று போதிக்கிறது.

நமது லுத்தரன் போதகத்தைச் சரியாய் அறிந்துகொண்டோர்: நான் அறிவிக்கும் பாவமன்னிப்பு பராபரனுடைய மன்னிப்பு என்று விசுவாசிக்கிறாயோ என்கிற வார்த்தைகளாலும், நான் பிதா, குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே உன் பாவங்களை உனக்கு மன்னிக்கிறேன் என்கிற வார்த்தைகளாலும் இடறல் அடையார்கள்.

இடறலடையும் இதரசபைப் போதகர்கள் தாழ்மை பூண்டவர்களாய்: நீசப்பாவியாகிய நான் என்னைப்போன்றவர்களின் பாவத்தை மன்னிக்கத் துணிவதெப்படி, இது அகந்தையும் பெருமையுமாகுமல்லவோ என்பர். தெய்வ ஏற்பாட்டை மனுஷ புத்தியால் ஆட்சேபித்துக் குலைப்பது அகந்தையேயன்றி, அவ்வேற்பாட்டுக்கு அமைந்து நடப்பது அகந்தையல்ல. அன்றியும், நாம் பாவக்கட்டவிழ்ப்பதைக் குறைவாய்ப் பேசுகிற அவர்கள் சுவிசேஷப் பிரசங்கம் செய்வது சரியா, ஞானஸ்நானம் கொடுப்பது சரியா, கர்த்தருடைய இராப்போசனம் பரிமாறுதல் சரியா, இவைகள் பாவக்கட்டவிழ்த்தல் அல்லவா. நான் உன்னை ஞானஸ்நானம் பண்ணுவிக்கிறேனென்று சொல்லக்கூடிய ஒருவன், நான் உன் பாவங்களை மன்னிக்கிறேன் என்று சொல்வதற்கு ஆட்சேபனையென்ன. ஞானஸ்நானம் செய்விக்க அதிகாரம் கொடுத்தவரே பாவங்களை மன்னிக்கவும் அதிகாரம் கொடுத்திருக்கிறார். ஆகையால் இது காரியத்தில் எவரும் இடறலடைய நியாயமில்லை.

பாவசங்கீர்த்தனத்தால் பயன் பெறுவோர் ஆர். பாவசங்கீர்த்தனம் பாவிக்கு மன்னிப்புவரவேண்டுமென்று விரும்புகிற ஒரு விருப்பமல்ல. பராபரன் அவன் பாவங்களை மன்னிக்கவேண்டுமென்று செய்கிற செபமுமல்ல, அல்லது பாவியானவன் பாவமன்னிப்பைப் பெறுவதற்கான வழியின்னதென்று அவனுக்குக் காண்பிக்கிற ஒரு வழிகாட்டியுமல்ல, அது பாவங்களை மன்னித்தலாம். இம்மன்னித்தலோ



தேவமன்னிப்புமனித மன்னிப்பு என இரு வெவ்வேறு மன்னிப்புகள் அல்ல. அது ஒரே மன்னிப்பு. இப்பூமியில் மன்னித்தலே வானத்தில் மன்னித்தலாம். இப்பூமியில் கட்டவிழ்த்தலே வானத்தில் கட்டவிழ்த்தலாம். சுருக்கிச் சொல்லில், பராபரன் தமது ஊழியனைக்கொண்டு பாவியின் பாவத்தை மன்னித்து அவன் கட்டை அவிழ்க்கிறார். அது ஒரே செய்கை. பாவமன்னிப்பாகிய தீர்த்தத்தைத் தேடி மான்போல் வாஞ்சையாய்க் கதறும் ஆத்துமாவுக்கு: நான் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினால் உன் பாவங்களை உனக்கு மன்னிக்கிறேன், ஆமென் என்ற மதுரமான வார்த்தைகள் சொல்லப்படுகையில் கர்த்தர் தாமே மன்னித்து அதன் தாகத்தைத் தீர்க்கிறார். தொனி மனிததொனி, வார்த்தையோ தேவவார்த்தை. மனுஷன் மன்னிக்கையில், பராபரன் மன்னிக்கிறாரோ இல்லையோ என்று சந்தேகிக்க ஏதுவில்லை. "பூமியில் எதைக் கட்டவிழ்க்கிறாயோ அது வானத்தில் கட்டவிழ்க்கப்பட்டதாயிருக்கும்" என்றும் "எவர்கள் பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்பட்டிருக்கின்றன" என்றும் சத்தியவாசகர் சொல்லியிருக்க, சந்தேகம் என்னத்திற்கு. பராபரன் மனிதனைக்கொண்டு கூறுவிக்கும் மன்னிப்பு பாவிக்குச் சொந்தமாவதற்கோ விசுவாசத்தால் அதைப் பற்றிக் கொள்ளல் அவசியம். யாதொரு ஈவை ஏற்றுக்கொள்ளுகிறவனே அதனால் பயன் பெறுவான். விசுவாசமோ பாவக் கட்டவிழ்க்கும் காரணமாயிராமல், பாவமன்னிப்பை ஏற்கும் கையாக மாத்திரம் இருக்கிறது. மன்னிப்பின் வார்த்தைகளைக் கேட்கிறவன் அவைகளை விசுவாசித்தாலும் விசுவாசியாவிட்டாலும் மன்னிப்பு மன்னிப்பே. இந்த மன்னிப்பை நம்பாதவன் அந்த மன்னிப்பை நம்பாதபடியால் ஆக்கினைக்குள்ளானவனே.

ஏனென்றால் இரட்சிக்கப்படுகிறவர்களுக்குள்ளேயும் கெட்டுப் போகிறவர்களுக்குள்ளேயும் பராபரனுக்கு நாங்கள் கிறிஸ்துவின் நற்கந்தமாயிருக்கிறோம். இவர்களுக்கோ மரணத்துக்கு மரணவாசனையும், அவர்களுக்கோ ஜீவனுக்குச் ஜீவவாசனையுமாகத் தானே என்று எழுதியிருக்கிறது (2 கொரி. 2, 15. 16).

பாவமன்னிப்புக் கூறுதலை நம்பமாட்டேன் என்று வெளியரங்கமாய்ச் சொல்லுகிறவனுக்குப் பாவங்களை மன்னித்தல் பன்றிக்கு முன் முத்தைப் போடுதலுக்கு ஒக்கும். ஆதலால் அவ்வாறு செய்யோம்.

பிராபரனுடைய வசனம் சத்தியமும் அவர் கூறும் மன்னிப்பு நிச்சயமுமாயிருக்க, அதை நம்பாதிருப்பது எவ்வளவு அநியாயம். யாதொருவனுடைய சந்தேகமும் அவநம்பிக்கையும் தேவ வாக்கையும் சத்தியத்தையும் பொய்யாக்கவும், பயனறச் செய்யவும் கூடாது.

அதுபோலவே, பாவமன்னிப்பு அதைக் கூறும் தெய்வ ஊழியனுக்குரிய குற்றங்குறைவுகளாலும், பயனற்றுப் போகாது. பாவமன்னிப்பைக் கூறுங் குருவுக்குப் பராபரனுடைய சித்தமின்னதென்றும், பாவ அறிக்கை செய்கிறவனின் மன நிலை இன்னதென்றும் தெரியாதிருப்பதாலும், அவன் தானும் இந்த அந்தக் குற்றச் சாட்டுக்கு அருகனாயிருப்பதாலும், அவன் கூறும் மன்னிப்புக்குப் பங்கம் வரும் என்று சொல்ல இடமில்லை.

பராபரனுடைய சித்தம் இன்னதென்று வேத வசனம் தெளிவாய்ச் சொல்லுகிறது. அறிக்கை செய்கிறவனின் மன நிலை ஒருவாறு அவன் வாக்கினால் விளங்கும். ஒருவேளை அவன் வாக்கு அச்சமயம்

மாய்மாயிருப்பினும் இருக்கலாம். ஆயினும், அவன் பின்னுஞ் குணப்பட்டு, முன் தனக்குக் கூறப்பட்ட மன்னிப்பைப் பயன்படுத்திக் கொள்ள இடமுண்டு. மேலும், குருவின் குற்றம் குறைகள் அவன் பிரசங்கிக்கும் வசனத்தின் வல்லபத்தையும், கையாடும் சாக்கிரமெந்துகளின் சத்தியையும் குறைக்கக் கூடாததுபோல், அவன் கூறும் பாவமன்னிப்பின் பயனையும் குறைக்கக்கூடாது. இதையும் சிலர் ஆட்சேபித்துக் கர்த்தர் தமது சீஷருடனே: நீங்கள் பரிசுத்த ஆவியை வாங்குங்கள் என்று மொழிந்தபின், நீங்கள் எவர்கள் பாவங்களை மன்னிக்கிறீர்களோ முதலிய வார்த்தைகளைச் சொன்னதால் பரிசுத்த ஆவியையுடைய குருமார் மாத்திரமே பாவங்களை மன்னிக்கலாம், இந்த அந்தக் குரு பரிசுத்த ஆவியை யுடையவரல்ல என்று எதிர்ப்பேசுவர். பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் சீஷரின் கூட்டமாகிய திருச்சபைக்குக் கொடுக்கப்பட்டது. திருச்சபை பரிசுத்த ஆவியை உடையது. பாவமன்னிப்பைக் கூறும் குரு திருச்சபையால் அழைத்து நியமிக்கப்பட்ட அதன் ஸ்தானுபதி. ஆகையால் அவன் கூறும் மன்னிப்பு பரிசுத்த ஆவியையுடைய திருச்சபையின் மன்னிப்பு. இதுவோ பராபரனுடைய மன்னிப்பு. இப்படியே அந்த ஆட்சேபனையும் புடத்துக்கு நிற்பதல்ல.

ஆகையால் தேவஊழியர் கூறும் மன்னிப்பைப் பராபரனுடைய மன்னிப்பாக விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவன் எல்லாம் பாவத்தால் உண்டான கலக்கமும் அசமாதானமும் நீங்கி, சமாதானமும் ஆறுதலும் அடைவான்.

நான் இம்மட்டும் பேசிவந்த பாவசங்கீர்த்தனம் கையாடப்படும் சமயங்கள் நமது ஆராதனை முறைமைப்படி 2: முதலாவது நமது பொது ஆராதனையின் ஆரம்பத்தில் அதில் கூறப்படும் பாவமன்னிப்பு முழுச்சபைக்கும் பொதுவாய்க் கூறப்படுவதால் பொதுவானதென்னப்படும் (Absolutio generalis). – இரண்டாவது சமயம் கர்த்தருடைய இராப்போசனத்திற்கு முந்தின தினத்தில் - அல்லது முந்தினமணி நேரங்களில். இச்சமயத்தில் இராப்போசன விருந்தாடிகளில் ஒவ்வொருவனுக்கும் தனித்தனியே பாவமன்னிப்புக் கூறப்படுவதால் இது விசேஷித்ததென்னப்படும். இதைக் குறித்து அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கை சோதித்தறியப்பட்டும் பாவக்கட்டவிழ்க்கப்பட்டுமிருக்கிறவர்களுக்கு மாத்திரம் நற்கருணை கொடுக்கிறவழக்கம் எங்களுக்குள் கைக்கொள்ளப்பட்டுவருகிறது. ஏனெனில் பாவ அறிக்கை செய்து பாவமன்னிப்பைப் பெற்றவனே கர்த்தருடைய இராப்போசனம் வாங்க ஆயத்தப்பட்டவனாயிருக்கிறான் என்று சொல்லுகிறது. இது விஷயம் விளங்கும்படி

## III.

பாவசங்கீர்த்தனத்திற்கும் பரிசுத்த இராப்போசனத்திற்குமுள்ள நற்சம்பந்தத்தைக் கவனிப்போம்.

இந்த நற்சம்பந்தத்தை அறியாதோர் கூறும் பல ஆட்சேபனைகளுக்குச் சமாதானம் கூறுவதால் இச்சம்பந்தத்தை விளங்க வைக்க விரும்புகிறேன்.

பரிசுத்த இராப்போசனத்தை வாங்குவதால் நாம் பாவமன்னிப்பைப் பெறக்கூடியதாயிருக்க, அதற்குமுன் பாவசங்கீர்த்தனத்தால் பாவமன்னிப்பைப் பெறுவதற்கு அவசியம் என்ன என்பது ஓர் முக்கிய ஆட்சேபனை.



பரிசுத்த இராப்போசனம் பாவமன்னிப்பை மாத்திரமே நமக்குக் கொடுப்பதற்கு ஏற்பட்டதல்ல. இது அநேக நன்மைகளை அளிக்கும் விருந்து:

(a) இது உங்களுக்காகக் கொடுக்கப்படுகிற என் சரீரமென்றும், இது பாவமன்னிப்புக்கென்று உங்களுக்காகச் சிந்தப்படுகிற என் இரத்தமென்றும் கிறிஸ்து சொன்னார். ஆகையால் கிறிஸ்துவினுடைய திருச்சரீரத்தையும் திரு இரத்தத்தையும் வாங்குகிறவன் அவற்றை இயேசுநாதர் பலியாகச் செலுத்திச் சம்பாதித்த பாவமன்னிப்பைப் பெறுகிறான்.

(b) என் மாமிசத்தைப் புசித்து என் இரத்தத்தைக் குடிக்கிறவன் எனக்குள்ளும் தரித்திருக்கிறான், நான் அவனுக்குள்ளும் தரித்திருக்கிறேன் என்று யோவா. 6, 56-லும், ஒருவன் என்னிலும் நான் அவனிலும் நிலைத்திருந்தால் அவனே வெகுகனியைக்கொடுக்கிறான் என்று யோவா. 15, 5-லும் கர்த்தர் திருவுளம்பற்றினார். ஆகையால் பரிசுத்த இராப்போசனம் நமக்குக் கிறிஸ்துவினுடைய ஐக்கியத்தையும் அதனால் ஞான ஜீவனையும் அளிக்கும் விருந்து என்பது விசதம்.

(c) பரிசுத்த இராப்போசனம் நமக்கு ஞான ஜீவனைமாத்திரமல்ல, நித்திய ஜீவனையும் அளிக்கிறது. என் மாமிசத்தைப் புசித்து என் இரத்தத்தைக் குடிக்கிறவனுக்கு நித்திய ஜீவனுண்டு என்று கர்த்தர் திருவாய் மலர்ந்தருளினார் (யோவா. 6, 54).

(d) மேலும், கிறிஸ்துவினுடைய சரீரத்தைப் புசித்து இரத்தத்தைக் குடிக்கிறவர்களுக்கு மகிமையான உயிர்த்தெழுதலின் திடநம்பிக்கையுண்டு. என் மாமிசத்தைப் புசித்து என் இரத்தத்தைக் குடிக்கிறவனை நான் கடைசிநாளில் எழுப்புவேன் என்று நமது அருமை இரட்சகர் மொழிந்தருளினார்.

(e) அன்றியும், நாம் பரிசுத்த இராப்போசனத்தை வாங்குவது இத்தியாதி நன்மைகளைப் பெறுவதற்கு மாத்திரம் அல்ல. என்னை நினைக்கிறதற்காக இதைச் செய்யுங்கள் என்று கர்த்தர் கற்பித்தாராதலால் நமக்குக் கிறிஸ்து பாராட்டின சொல்லிமுடியாத அன்பை நினைத்து, அவர் வருமட்டும் அவர் மரணத்தை அறிவிக்கிறவர்களாயிருக்கும்படி நாம் அடிக்கடி கர்த்தருடைய பந்திக்குச் சேரக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஆகையால், நாம் கர்த்தருடைய பந்திக்குச் சேருவது பாவமன்னிப்பைப் பெறவேண்டுமென்கிற ஒரே நோக்கத்தோடல்ல. பாவசங்கீர்த்தனத்திலோ இந்த ஒரே நோக்கமுண்டு. பாவசங்கீர்த்தனத்தில் வசனத்தின் ஊழியர் சொல்லும் வார்த்தையால் பாவமன்னிப்பு பெற்று, இதற்கு உறுதியும் முத்திரையுமாக தேவநற்கருணையில் கிறிஸ்துவினுடைய சரீரத்தையும் இரத்தத்தையும் வாங்குகிறோம். விசுவாசிக்கிறேன் ஆண்டவரே, என் அவிசுவாசத்துக்கு உதவி செய்யும் என்று நிமிஷந்தோறும் ஜெபிக்க வேண்டிய நமக்குப் பாவமன்னிப்பின் திடநிச்சயமுண்டாக நெரிந்த நாணலை முறியாதவரும் மங்கி எரிகிற திரியை அவியாதவருமாகிய கர்த்தர் இவ்வெத்தனங்களை ஏற்படுத்தினதற்காக அவருடைய திருநாமத்துக்கு இஸ்தோத்திரம் செலுத்த நியாயமுண்டேயன்றி, எனக்கு வேண்டிய அளவுக்கு மேலாக பாவமன்னிப்பு கொடுக்கப்படுகிறதென்று சொல்ல எள்ளளவும் நியாயமில்லை.

பாவசங்கீர்த்தனத்தில் பாவமன்னிப்பைப் பெற்றவன் கர்த்தருடைய இராப்போசனத்துக்குச் சேருவதினால் பாவமன்னிப்பின் திடநிச்

யத்தைப் பெறுகிறுன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேம்; ஆயினும், பாவ சங்கீர்த்தனத்துக்கு வந்து பாவமன்னிப்பைப் பெற்றவன் மாத்திரம் கர்த்தருடைய இராப்போசனத்துக்குச் சேரலாம் என்று சொல்வது சரியல்ல; இவ்விரண்டையும் ஒன்ருயிணைக்க என்ன நியாயமுண்டு என்று சிலர் ஆட்சேபிக்கலாம். இதற்கு இருவகை நியாயமுண்டு:

ஒமுதலாவது பரிசுத்த இராப்போசனத்தைப் பரிமாறுகிற குருவினிமித்தம் அது நியாயம்.

"பராபரனுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரனுகிய தெய்வ ஊழியன் தன் வசம் ஒப்புவிக்கப்பட்ட இப்பொக்கிஷங்களை மிக்க சாவதானமும் நிதானமுமாய்க் கையாட வேண்டியவன். அவன் பன்றிக்கு முன் முத்தைப்போடும் குற்றத்துக்கு உள்ளாகாதபடிக்கு விருந்தாடி ஒவ்வொருவனுக்கும் புத்திசொல்லி, அவனைப் பாவநித்திரையினின்றும் நிர்விசாரத்தினின்றும் தட்டி எழுப்பி, அவனை மெய்மனஸ்தாபத்துக்கு ஏவி, அவன் வாய்ப் பிறப்பைக் கேட்பதற்குப் பாவசங்கீர்த்தனமே நல்ல சமயம். இது முகாந்தரமாய்ப் பொதுப் பாவசங்கீர்த்தனத்தைப் பார்க்கிலும் அதாவது பொதுவாய் விருந்தாடிகளெல்லாரும் பாவமன்னிப்புச் செபத்தைச் சொல்வதினுல் செய்யும் பாவசங்கீர்த்தனத்தைப் பார்க்கிலும் குருவினிடத்தில் தனித்தனியே வந்து தனித்தனியே பாவங்களை அறிக்கையிட்டுச் செய்யும் தனிப் பாவசங்கீர்த்தனம் அதிக நல்லது.

இதற்கு ஆயத்த ஆராதனையும் ஆயத்தப் பிரசங்கமும் போதாதா என்போர் உண்டு. ஆயத்த ஆராதனை எப்பொழுதும் குருவினுல் நடத்தப்படுகிறதும் ஆயத்த ஆராதனைக்குச் சபையார் யாவரும் வருகிறதும் எப்பொழுதும் கூடுமானதாயிருக்கிறதில்லை. பாவசங்கீர்த்தன ஆராதனையே நமது அக்குஸ்தாபுரி விசுவாச அறிக்கைப்படி கர்த்தருடைய பந்தி பரிமாறுதலுக்கு முன் அவசியம் நடக்கும்படி ஏற்பட்ட சரியான ஆயத்த ஆராதனையாம்.

இரண்டாவது: பரிசுத்த இராப்போசன விருந்தாடியினிமித்தமும் அது நியாயம்.

(a) மனுஷன் தன்னைத்தான் சோதித்தறிந்து இப்படியே இந்த அப்பத்திலே புசித்து, இந்தப் பாத்திரத்திலே குடிக்கக்கடவான் என்று சொல்லியிருக்கிறது. ஒரு கிறிஸ்தவன் தன்னைத்தான் சோதித்து அறிவதற்குத் தேவ திருவசனத்திலும் உத்தம எத்தனம் உண்டோ. அதைத் தெளிவுற, பயனுற விபரிப்பதற்கு வசனத்தின் ஊழியனைப் பார்க்கத் தகுதியானவன் யார். தற்சோதனைக்குக் குருவின் புத்திபிரசங்கம் பெரிய உதவி. புத்திபோதனையின்றித் தங்களைத் தாமே சோதித்தறியக் கூடியவர்கள் வெகு சிலர். இச்சிலருக்கும் பாவசங்கீர்த்தனப் பிரசங்கம் எவ்விதத்திலும் உதவியேயன்றித் தடையே அல்ல.

(b) மேலும், நீ பீடத்தண்டை உன் காணிக்கையைச் செலுத்த வந்து, உன் சகோதரனுக்கு உன் பேரில் குறையுண்டென்று அங்கே நினைவு கூர்ந்தாயாகில், அவ்விடத்திலே பீடத்தின் முன் உன் காணிக்கையை வைத்துவிட்டுப் போய், உன் சகோதரனேடே முந்த ஒப்பரவாகு என்பது கிறிஸ்துவின் கட்டளை. காணிக்கை செலுத்தப் பீடத்தண்டை போவதிலும் நற்கருணை வாங்கப்போவது அதிக முக்கிய சமயம். சபையோடு கர்த்தருடைய பந்திக்குச் சேருகிற ஒவ்வொருவனும் அச்சபையோடு ஒப்பரவாவது கடமையன்றே. சபையின் நாமத்தில் நின்று ஊழியம் செய்கிற குருவினிடத்தில் பாவஅறிக்கை செய்து பாவ

மன்னிப்பைப் பெறுகிற ஒவ்வொருவனும் சபையோடு ஒப்பரவாகிறுன். ஏனென்ருல் ஒவ்வொரு கிறிஸ்தவனின் பாவமும் சிரசாகிய கிறிஸ்துவுக்கு விரோதமாயிருப்பது போலவே உடலாகிய சபைக்கும் விரோதமாயிருக்கிறது. குரு மன்னிப்புக் கூறுதல் சபை மன்னிப்புக் கூறுதலாம். இப்படி மன்னிப்புப் பெற்றுக் கர்த்தருடைய பந்திக்குச் சேருகிறவன் சபையோடு நல்ல ஐக்கியம் பெற்றவனும், திருவிருந்திற்கு ஆயத்தப்பட்டவனும், அதின் ஆசீர்வாதங்களுக்குப் பங்காளியாகத் தக்கவனுமாயிருக்கிறுன். இவைகளினுல் பாவசங்கீர்த்தனத்திற்கும் கர்த்தருடையஇராப்போசனத்திற்கு முள்ள நற்சம்பந்தம் விளங்கும்.

ஆகையால் பொதுவாகப் பாவசங்கீர்த்தன ஏற்பாடும், விசேஷமாக நமது கிறிஸ்தவர்கள் கர்த்தருடைய இராப்போசனத்தை வாங்கு முன் பாவசங்கீர்த்தனத்துக்குச் சேர வேண்டுமென்கிற நமது சபை ஒழுங்கும் முழுவதும் நியாயமும், அவசியமும், பயன் மிகுத்ததுமாய் நாம் பார்த்திருக்கிறபடி தேவ திருவசனத்தின்மேல் அஸ்திபாரப் பட்டதும் சபையில் தொன்று தொட்டுப்பயனுற வழங்கி வந்ததும், நமது விசுவாச பிதாக்கள் நமது அறிக்கைகளில் வற்புறுத்திப் பேசுவதுமான இந் நல்லொழுங்கை நன்றியறிதலோடு ஒப்புக்கொண்டு அதற்குக் கட்டுப்பட்டு நடப்பது கிறிஸ்தவன் கடமை. "பிரிந்துபோகிறவனே தன் இச்சையின்படி செய்யப் பார்க்கிறுன்."

மிகப்பிரயோசனமான பாவசங்கீர்த்தன முறைமையும் ஒழுங்கும் நமது சபையில் என்றும் நிலை நின்று பயன் விளைவிக்கக் கர்த்தரே கிருபை செய்வாராக.

---

## மிசியோன் சமாச்சாரங்கள்.

### க. ஓர் துக்க செய்தி.

கர்மானியாவில் சங்: ஈலபெல்ட் ஐயரவர்களின் நேசமனைவியாகிய அருமை அம்மாளவர்கள் சென்றமார்ச்சுமாச மத்தியில் கர்த்தருக்குள் நித்திரை அடைந்ததாகச் செய்தி வந்தது. இத்தேசத்தில் அந்த அம்மாளின் தாயடைவான பட்சத்தை அனுபவித்தவர்களும், அறிந்தவர்களுமான யாவரும் அவர்கள் மரணத்துக்காக விசனப்படுவார்கள் என்பது நிச்சயம். இரக்கமுள்ள கர்த்தர் சங்: ஐயரவர்களுக்கு நல்லாறுதலைக் கட்டளையிடுவாராக.

### உ. சீமைக்குப் பயணம்.

சீர்காழியிலிருந்த சங்: சாந்தகிரீன் ஐயர் மிசியோன் விஷயமாய்ச் சமுசார சகிதம் ஏப்பிரில்மாச மத்தியில் சீமைக்குப் புறப்பட்டு போனுர். அவர் பயணப்பட்ட சில நாட்களுக்குப் பின் சுகத்தின் பொருட்டு செமினேரி டிரெக்தர் சங்: கேரிங் ஐயர் மிகுந்த வியாதியாயிருக்கும் தமது சமுசார சகிதம் போகிறுர். இவர்களோடு சங்: சாந்தகிரீன் ஐயர் குமாரத்தியும், சங்: சீனியர் பம்பரீன் ஐயர் கனிஷ்ட புத்திரியும் போகிறுர்கள். இரக்கமுள்ள கர்த்தர் யாத்திரை செய்யும் இவர்கள் யாவருக்கும் இரங்கி, அவர்கள் சுகபத்திரமாய்த் தங்கள் பிறந்தகம் போய்ச

சேரவும், அவர்கள் யாத்திரையின் நோக்கமெல்லாம், வாய்க்கவும் அருள்புரிவாராக.

## வர்த்தமான சங்கிரகம்.

The War in South Africa: — ஆரேஞ்சு ப்ரீஸ்டேட்டின் தென் பாகங்களிலிருந்து வடக்கே சென்ற போவர்கள் இப்போது ப்ளூம்பாண்டெய்னுக்குக் கிழக்கிலும் தெற்கிலும் வெகு பலமாய் இருக்கிறார்கள். கிழக்கே அநேக ஆயிரம் போவர்கள் லேடிப்ரண்று (Ladybrand) என்ற இடத்தில் இருந்துகொண்டு, சமீபத்தில் தங்கியிருந்த ஓர் அங்கிலேய சேனையைப் பலமாய் எதிர்த்ததினால் இவர்கள் பின்னிட்டுச் செல்கையில், மேற்கே க்ரோன்ஸ் ப்ரூட் (Kroonspruit) என்னும் ஸ்தலத்தில் பதிவிருந்த போவர்கள் இவர்களை வழிமறித்து 7 பீரங்கிகளையும் 200 சாமான் வண்டிகளையும் பறித்துக்கொண்டதன்றி அதிக உயிர்ச்சேதமும் உண்டுபண்ணினார்கள்.

தெற்கே ரெட்டர்ஸ்பர்க் (Reddersburg) என்னும் இடத்தில் 600 பேர்கொண்ட ஒரு சிறு இராணுவத்தை 3000 போவர்கள் சூழ்ந்துகொண்டு, காயப்பட்டு விழுந்தவர்கள் போக மற்றவர்களைச் சிறைபடுத்தினார்கள். இன்னும் வேறுசில இடங்களிலும் சில அங்கிலேயரைப் பிடித்திருக்கிறார்கள். இப்போது ப்ளூம்பாண்டெய்னுக்குத் தென்கிழக்கில் 65 மைல் தூரத்திலிருக்கிற உவெப்னர் (Wepener) பட்டணம் சத்துருக்களால் முற்றுகைப் போடப்பட்டும் விடுதலையாகிவிட்டது.

மேற்கில் மேத்துவன் பிரபு எதிரிகளில் 54 பேரைச் சிறைபிடித்தார். மாவெக்கிங் பட்டணத்தை விடுவிக்கச் சென்ற சேனை பல தரமும் போவர்களால் துரத்தப்பட்டதனால் வேறொரு சேனை வடக்கிலிருந்து வர உத்தரவாகி இருக்கிறது. அது வந்து சேர இன்னும் ஒரு மாதம் செல்லுமாம். அதுவரையில் மாபெக்கிங் முற்றுகையைத் தாங்கும் என்பது சந்தேகத்துக்கானது.

சென்ற மாதத்தில் தேவையான குதிரைகளும் படைகளும் ப்ளூம்பாண்டெய்ன் வந்து சேர்ந்தமையால், ராபர்ட்ஸ் பிரபு இப்போது த்ரான்ஸ்வாலை நோக்கிச் செல்லக்கூடியவராய் இருக்கிறார். கற்றுக்கார் தளபதி சில இடங்களில் யுத்தியாய்த் தமது சேனையை நடத்தாததால் நேர்ந்த நஷ்டத்தின் நிமித்தம் வேலையினின்று நீக்கப்பட்டார். புல்லர், உவாரன் முதலிய இன்னும் சில சேனாபதிகளையும் ராபர்ட்ஸ் பிரபு குற்றப்படுத்தியிருக்கிறார். பேர்பெற்ற சில தளபதிகளின் கீர்த்தி இந்த யுத்தத்தால் குலைவது மிகவும் விசனப்படத்தக்கதே. போவர்களின் தலைமைத் தளபதியாகிய ஷூபேர் (General Joubert) என்றவர் சென்ற மார்ச்சு மாதக் கடைசியில் வியாதிப்பட்டு மரித்தார். நமது மகா இராணியாரும், ராபர்ட்ஸ் பிரபுவும் அவர் மனைவிக்குத் தங்கள் அனுதாபத்தைத் தந்தி மூலமாய்த் தெரிவித்தார்கள். விசேஷித்த போவர் சேனாதிபரில் ஒருவராகிய வில்போவதே மாரேய் (Villebois de Mareuil) என்ற பிரான்சிய தளக்கர்த்தனும் யுத்தத்தில் மடிந்தார். போவர்களோ, முன்னிலும் அதிக முயற்சியாய் யுத்தத்தை நடத்தி வருகிறார்கள். த்ரான்ஸ்வாலின் தலைநகரமாகிய ப்ரெற்றோரியா (Pretoria) இரண்டு வருஷத்து முற்றுகையைத் தாங்கும்படியான ஆயத்தங்கள் செய்யப்பட்டு வருகின்றன.

Printed at the Ev. Luth. Mission Press, Tranquebar. 1900.

## தரங்கை தமிழ் லுத்தரன் சுவிசேஷ பிரபல்லிய சங்க பொக்கிஷ வரவு செலவு கணக்கு.

| | RS. | AS | P. | RS. | AS | P. |
|---|---|---|---|---|---|---|
| கவர்ண்மெண்ட் பிரா. நோட்டு நீ. M. 003764ல் | 500 | 0 | 0 | | | |
| 1899 ௵ அக்டோபர் ௴ கனம் A. B. யோஹான்சன் ஐயர் என் வசம் ஒப்புவித்த தொகை ... ... | 70 | 10 | 1 | | | |
| 1899 ௵ நவம்பர் ௴ கனம் C. J. சாந்துகிரென் ஐயர் என் வசம் ஒப்புவித்த தொகை ... | 240 | 9 | 0 | | | |
| A. உண்டியல் வருமானம் (ஜூலாய் ௴ 9-ம் ௳ 1899.) | | | | | | |
| இரங்கூன் ... ... ... ... ... | 13 | 10 | 0 | | | |
| திண்டுக்கல் ... ... ... ... | 11 | 1 | 6 | | | |
| கோயம்புத்தூர் (பட்டணம்) ... ... ... | 7 | 1 | 4 | | | |
| ஈரோடு ... ... ... ... ... | 6 | 10 | 2 | | | |
| புரசபாக்கம் ... ... ... ... ... | 5 | 5 | 0 | | | |
| அம்மாபட்டி ... ... ... ... ... | 5 | 0 | 0 | | | |
| பிறையாறு ... ... ... ... ... | 4 | 12 | 4 | | | |
| சீர்காழி ... ... ... ... ... | 4 | 8 | 2 | | | |
| ஏற்காடு ... ... ... ... ... | 4 | 8 | 1 | | | |
| தஞ்சாவூர் ... ... ... ... ... | 4 | 0 | 10 | | | |
| கோயம்புத்தூர் வட்டம் ... ... ... | 4 | 0 | 2 | | | |
| மாயவரம் (பட்டணம்) ... ... ... | 2 | 14 | 2 | | | |
| திருவாலூர் ... ... ... ... ... | 2 | 8 | 0 | | | |
| தரங்கன்பாடி ... ... ... ... ... | 2 | 5 | 9 | | | |
| மணிக்கிராமம் ... ... ... ... ... | 2 | 4 | 0 | | | |
| திருப்பூர் ... ... ... ... ... | 2 | 4 | 0 | | | |
| சிதம்பரம் ... ... ... ... ... | 2 | 0 | 8 | | | |
| மதுரை ... ... ... ... ... | 1 | 10 | 7 | | | |
| இராயபுரம் ... ... ... ... ... | 1 | 8 | 5 | | | |
| விழுப்புரம் ... ... ... ... ... | 1 | 7 | 6 | | | |
| சென்னை (வட்டம்) ... ... ... ... | 1 | 2 | 0 | | | |
| திருப்பந்துருத்தி ... ... ... ... | 1 | 0 | 9 | | | |
| புதுக்கோட்டை ... ... ... ... | 1 | 0 | 0 | | | |
| நாகப்பட்டணம் ... ... ... ... | 0 | 14 | 7 | | | |
| கூடலூர் ... ... ... ... ... | 0 | 12 | 9 | | | |
| அணைக்காடு ... ... ... ... ... | 0 | 11 | 3 | | | |
| மாயவரம் (வட்டம்) ... ... ... ... | 0 | 10 | 9 | | | |
| பெங்களூர் ... ... ... ... ... | 0 | 10 | 6 | | | |
| மணல்மேடு ... ... ... ... ... | 0 | 9 | 0 | | | |
| காரைக்கால் ... ... ... ... ... | 0 | 8 | 0 | | | |
| செங்கல்பட்டு ... ... ... ... ... | 0 | 8 | 0 | | | |
| ரெட்டிக்குப்பம் ... ... ... ... ... | 0 | 5 | 0 | | | |
| சதுரங்கப்பட்டணம் ... ... ... ... ... | 0 | 4 | 0 | | | |

| | RS. | As | P. | RS. | As | P. |
|---|---|---|---|---|---|---|
| **B. மற்றுச் சேர்ப்புகளும் நன்கொடைகளும்.** | | | | | | |
| மதுரை மிசியோன் பண்டிகை ஏலத்தில் சேர்ந்தது ... ... ... ... ... | 7 | 13 | 0 | | | |
| மதுரை மாசில்லாமணி நாடார் (உண்டிகலைய சேர்ப்பு) ... ... ... ... | 3 | 5 | 2 | | | |
| மதுரை பள்ளிக்கூடத்து பிள்ளைகளின் சேர்ப்பு | 0 | 4 | 0 | | | |
| „ Bible woman சின்னம்மாள் „ | 0 | 2 | 0 | | | |
| „ „ அருளம்மாள் | 0 | 6 | 9 | | | |
| „ மிசியோன் ஊழியர் சேர்ப்பு | 1 | 4 | 10 | | | |
| தரங்கை செமினேரி மிசியோன் ஐக்கியக் கூட்டம் | 3 | 0 | 0 | | | |
| சென்னை யோவன்னு காபிரியேல் | 0 | 4 | 0 | | | |
| அரும்பூர் முத்தம்மாள் விதவை | 0 | 2 | 0 | | | |
| „ ஆதியாயி „ | 0 | 2 | 0 | | | |
| தஞ்சை பெண்பள்ளிக்கூட மாணாக்கிகள் | 2 | 4 | 7 | | | |
| திருப்பூர் பள்ளிக்கூட பிள்ளைகள் | 0 | 2 | 0 | | | |
| **C. வட்டி வரவு.** | | | | | | |
| சென்னை கவர்ண்மெந்து நோட்டு வட்டி வரவு | 8 | 11 | 8 | | | |
| தபால் சேவிங்ஸ்பாங்கு வட்டி ஷெ | 3 | 13 | 6 | | | |
| **D. செலவு.** | | | | | | |
| சென்னை இயேசுதாசன் சுவிசேஷகர் சம்பளம் மாதம் 5 ரூ வீதம். 1899-ம் வரு மே மீ முதல் டிசெம்பர் மீ வரையில் | 0 | 0 | 0 | 40 | 0 | 0 |
| கோயம்புத்தூர் ஆரோக்கியம் சுவிசேஷகர் சம்பளம் மாதம் 3-8-0 வீதம் 1899-ம் வரு ஏப்பிரில் மீ முதல் டிசெம்பர் மீ வரையில் | 0 | 0 | 0 | 31 | 8 | 0 |
| மொத்த வரவு ரூ | 942 | 1 | 11 | | | |
| மொத்தச் செலவு ரூ | 71 | 8 | 0 | 71 | 8 | 0 |
| பாக்கிக்கையிருப்பு ரூ | 870 | 9 | 11 | | | |
| **E. மேற்படி தொகை காக்கப்பட்டிருக்குப் விபரம்.** | | | | | | |
| சென்னை சர்க்கார் பத்திரம் நீ M. 003764 | | | | 500 | 0 | 0 |
| தபால் சேவிங்ஸ்பாங்கு புத்தகம் நீ 12284 | | | | 260 | 0 | 0 |
| கையில் | | | | 110 | 9 | 11 |
| | | | | 870 | 9 | 11 |

CUDDALORE,
10*th* April 1900.

**F. Schad,**
*President.*



## போதகர் ஆதரிப்பு பொதுப் பொக்கிஷம்.

ஷெ பொக்கிஷத்துக்கு கடந்த வருஷத்தின் பெந்தேகோஸ்தே பண்டிகை உண்டிசேர்ப்பினால் இன்னும் வந்த வரவு:

| | | RS. | AS. | P. |
|---|---|---|---|---|
| 1899 வருஷத்துக்காக | தஞ்சாவூர் | 1 | 10 | 0 |
| „ | இரங்கூன் | 12 | 0 | 0 |

**நன்கொடைகள்.**

| | RS. | AS. | P. |
|---|---|---|---|
| யோவன்னாள் காபிரியேல் (சென்னையைச் சேர்ந்த அணைகாட்டாபுத்தூர்.) ... ... ... ... | 1 | 0 | 0 |
| ஆதியாய் ... மாயவரத்தைச் சேர்ந்த அரம்பூர் ... | 0 | 2 | 0 |
| முத்தம்மாள் ... ... ... ஷெ ... ... | 0 | 2 | 0 |

மேற்படி ஈவுகளை நான் பெற்றுக்கொண்டு நன்றியறிதலோடு இதினால் தெரிவிக்கிறேன்.

Kilpauk, MADRAS.
9*th* April 1900.

**Joh. Kabis,**
பொக்கிஷதாரி.

### மரண அறிக்கை.

புறையார் மகா ள ள ஸ்ரீ. தாவீது பிள்ளையின் இளைய குமாரனும் எங்களால் அதிகமாய் நேசிக்கப்பட்டு வந்த எங்கள் இளைய சகோதரனுமாகிய அமுது பிள்ளை வேதானந்தம் சாமுவேல் சிலநாள் திரேகத்தில் அக்கி படர்ந்து அது சொஸ்தமானபின் சரீரம் முழுவதும் வீக்கம்கண்டு திடீரென்று 1900 வரு-ம் மார்ச்சு மாதம் 23-ம் உ வெள்ளிக்கிழமை பிற்பகல் 1½ மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரையடைந்தான். அவனது திரேகம் மறுநாள் 3 மணிக்கு நித்திய சீவனின் உயிர்த்தெழுதலுக்கென்று சகல கிறிஸ்தவ மரியாதையுடன் பெத்லேகேம் உத்தானதோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

பிள்ளையை இழந்த பெற்றோரையும் எங்களையும் கர்த்தர் தாமே தமது பரிசுத்த ஆவியைக் கொண்டு ஆற்றிதேற்றுவாராக. வயது 9 வரு 6 மாதம்.

கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பிக் கம்பீரத்தோடே சீயோனுக்கு வருவார்கள்: நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின்மேல் இருக்கும் சந்தோஷமும் மகிழ்ச்சியும் அவர்களைத் தொடர்ந்து பிடிக்கும் சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்.

ஏசாயா ந௫. ௰.

RANGOON,
4—5—1900.

D. Amirdanayagam Pillay.
D. Jesudasen Pillay.

# READY FOR SALE

*At the Ev. Luth. Mission Book - Depôt,* Tranquebar.

A

# TAMIL - ENGLISH DICTIONARY

CONTAINING

more than 30,000

WORDS & PHRASES

656 Pages Royal Octavo Size

**Price**

| | RS. | AS. | P. |
|---|---|---|---|
| Cloth half - bound ... ... ... ... | 3 | 0 | 0 |
| Country leather full - bound Back gilt ... | 3 | 8 | 0 |

---

# St. Luke's Gospel.

லூக்கா எழுதின சுவிசேஷம்.

விலை அணா 2.

வேதாகம சங்கத்தில் 1 அணாவுக்கு கொடுக்கப்படும்.

E. Maennig,
*Superintendent.*

